# 100

## மோகினி மாயை

'ஆனாலும் இந்த துஷ்டத்தனம் உங்களுக்கு ஆகாது. உங்களைக் கேட்பாரில்லையே!' என்று ரதி கொஞ்சம் ஆத்திரத்துடன் சொன்னாள்.

'என்னத்தை இப்பொழுது புதிதாகக் கண்டு விட்டாய்?' என்று மன்மதன் சீறினான்.

'அந்தப் பையன் பாலு, அவன் பாட்டிற்கு அடுத்த வீட்டுக் கமலா வுடன் சிறுபிள்ளையாய் இருந்தது முதல் சகஜமாகப் பழகிக்கொண்டு வந்தான். 'அம்மாமி, அம்மாமி!'என்று களங்கமற்ற உள்ளத்துடன் அவளுடனேயே பள்ளிக்கூட நேரம் போக மற்ற பொழுது முழுதும் கழித்துப் புத்தகங்களை வாங்கி வாசித்துக் கொண்டு வந்தான். அவனை எதற்காக இப்பொழுது இருந்தாற் போலிருந்து கிளறிவிட்டீர்கள்?'

'அவனை மட்டும் தான் கிளறிவிட்டேனா, அவள் பேரிலும் தான் பாணங்களைத் தொடுத்திருக்கிறேன்.'

'எதற்காக இந்தச் சேஷ்டை? செய்கிற அக்கிரமமெல்லாம் போதாதா? உங்களுக்கு வாழ்க்கைப்பட்டு எனக்கும் இந்தப் பாவங்களிலெல்லாம் பங்கா? – என் தலையெழுத்து!'

'மனிதர்களெல்லாம் மனோதத்துவ ஆராய்ச்சி செய்கிறார்களே–நான் செய்யக்கூடாதோ? நிர்ப்பந்தமற்ற காதல் பரீட்சை, விவாக ரத்து என்றெல்லாம் எவ்வளவோ செய்திருக்கிறோம்–இல்லையென்று சொல்லவில்லை. சந்திரன்–தாரை, இந்திரன்–அகலிகை, கச்சன்–தேவயானி இப்படியாக! மற்றொரு ஆராய்ச்சி செய்து பார்ப்போம் என்று இந்த இரண்டு பேர்வழிகளையும் தூண்டியிருக்கிறேன்.'

'இதென்ன ஆராய்ச்சி–புதிதாக அப்படி, சற்று சொல்லுங்கள்!'

'கமலத்துக்கு முப்பது வயதாகிறது. இரண்டாம் தாரம். குழந்தைகள் இல்லை. தேகக்கட்டு அப்படியே இருக்கிறது. இருபது வயது பெண் போல இருக்கிறாள்.'

'நல்ல அழகு–உடம்பு நிறைய நகைகள்!'

*கலாமோகினி (காலம் தெரியவில்லை)*

'பாலுவுக்கு இருபது வயது. வாட்டசாட்டமான அழகான பையன். பெண்ணைப்பற்றிய ஏக்கம் இப்பொழுது தான் அவன் உள்ளத்தில் முளையெடுத்துக் கொண்டிருக்கிறது. பொதுவாகப் பெண் அழகைக் கண்டு ஏங்கும் பருவம். இன்னும் எந்த குறித்த பெண்ணும் அவனை மயக்க வில்லை. இவ்விருவர் மனத்திலும் இதுவரையிலும் கணம் கூடதென்படாத ஒரு கிளர்ச்சியை ஏற்படுத்தினால் என்ன செய்கிறார்கள் பார்ப்போமே!'

'நன்றாகப் பார்த்தீர்கள்! எல்லாம் பார்த்துப் பார்த்துத் தான் கிடக்கிறது. உங்களுக்குத்தான் சலிப்பாக இல்லையே!'

'இந்த தினுசு புதிது. இந்த தேசத்தின் கட்டு திட்டங்களுக்கு அடங்கிய இருவர் இந்த மாதிரி சந்தர்ப்பத்தில் என்ன செய்கிறார்கள் என்று பார்க்கவேண்டாமா?'

'பெண் பாவத்தைக் கட்டிக்கொண்டதெல்லாம் போதாதா? இது பாக்கியாக்கும்?'

## 2

'பாலு, சற்று உட்காரேன் போகலாம். என்ன அவசரம் இப்பொழுது, பள்ளிக்கூடம் தான் இல்லையே!' என்று கமலம் சோம்பல் முறித்துக் கொண்டே என்றுமில்லாத இளக்கம் நிறைந்த குரலில் சொன்னாள்.

அன்று அங்கு வந்தது முதலே, அவளுடைய தோற்றத்தைக் கண்டது முதலே, பாலுவுக்கு ஏதோ ஒரு பதற்றம். எப்பொழுதும் போல அவள் அன்று இல்லை என்று கண்டான்.

'சிநேகிதன் காத்துக்கொண்டிருப்பான், அம்மாமி! இந்தப் புத்தகத்தை எடுத்துக் கொண்டு போகட்டுமா?' என்று சொல்லிக் கொண்டே ஊஞ்சலிலிருந்து எழுந்தான்.

'சரிதானடா, எல்லாம் போகலாம் சற்று கழித்து. சிநேகிதன் சற்று பார்த்துவிட்டுத் தானே போகிறான். எனக்கு ஒண்டியாக இருக்கிறது.'

'மாமா எப்பொழுது வருவார்?'

'எப்பொழுதோ எனக்குத் தெரியாது. இரண்டு நாளாவது ஆகும். உட்காரு, இதோ வந்துவிட்டேன்!' என்று சொல்லிவிட்டுக் கமலம் எழுந்து உள்ளே போனாள்.

பாலு ஊஞ்சலில் உட்கார்ந்தான். கமலம் எழுந்துபோன வேகத்தில் ஆட ஆரம்பித்த ஊஞ்சல் முன்னும் பின்னுமாகப் போயிற்று. பாலுவும் அத்துடன் முன்னும் பின்னுமாக ஆடினபொழுது அவன் உள்ளமும் முன்னும் பின்னுமாகப் போக ஆரம்பித்தது. சுற்றி சுவர்களைப் பார்த்தான்.

கூடத்தில், எதிரில் ரவிவர்மாவின் மோகினிப் படம் தொங்கிக் கொண்டிருந்தது. அந்த வீட்டிற்கு வந்தபொழுதெல்லாம் அவன் அதைப் பார்த்திருக்கிறான். அப்பொழுது பார்த்தபொழுது அவனுக்குத் திடீரென்று ஏதோ கனவு போன்ற ஒரு தோற்றம் ஏற்பட்டது.

அந்தப் படத்தின் சட்டத்துக்கு வெளியே ஒரு வாலிபன் நின்றான். படத்தில் இருந்த மோகினி அவனைப் பார்த்து பேசிக்கொண்டிருந்தாள்.

'பைத்தியமே, ஏனடா இறங்கிப் போகிறாய்? என்னை இந்த நிலையில் பார்த்துப் பரவசமடைவதைக் காட்டிலும் உனக்கென்ன வேலை? உன் யௌவனத்திற்கு?... நான் என்னமோ இன்று மனம் வைத்து இந்த ஊஞ்சலில் இப்படி உட்கார்ந்திருக்கிறேன். அவகாசமும் இடமும் இருக்கிறது. என் உள்ளம் ஒத்து ஆடுகிறது, மெய்யறிவு கூட மங்கி இருக்கிறது. நிர்பந்தமில்லை,வேறு கவலை இல்லை, அச்ச மில்லை, அடக்கமும் வெட்கமும்கூடக் கொஞ்சம் அகன் றிருக்கின்றன. ஒய்யாரமாக உட்கார்ந்திருக்கிறேன்! அடே, இந்த நிமிஷம் நேராது. மறுபடியும், சொல்லி விட்டேன்?... பிறகு வீணாக துக்கப்படாதே! இந்த மட்டிழந்த மோகினியைக் கண்டு பயந்து ஓடாதே! ஓடினால் இந்தப் பேய் உன்னை அடித்துவிடும்!'

படமே உயிர் கொண்ட உருவம் ஊஞ்சலாடுவது போலிருந்தது.

பாலு அதைக் கண்கொட்டாமல் என்பார்களே, அந்த மாதிரி பார்த்துக் கொண்டிருந்தான்.

'என்ன யோசிக்கிறாய்? நான் கூப்பிடுகிறேனே?' என்று சொல்லி மோகினி தலையை ஆட்டிக் கூப்பிட்டாள்.

'பாலு!'

பாலு தூக்கிவாரிப் போட்டதுபோல குரல் வந்த பக்கம் பார்த்தான்.

படத்திலிருந்த மோகினி நடந்துவருவது போலக் கமலம் வந்தாள்.

'என்ன அப்படிப் பார்க்கிறாய், பாலு? ரொம்ப இறுக்கமாக இருந்தது, குளித்துவிட்டு வேறு புடவை உடுத்திக் கொண்டேன்!' என்று சொல்லிக் கொண்டே முந்தானையைத் தொங்கவிட்ட வண்ணம் தலைமயிரை ஆற்றிக் கொண்டு அவள் அவன் பக்கத்தில் வந்து உட்கார்ந்தாள்.

'நேற்று கொடியில் போட்ட புடவையை விரித்துவிட மறந்து போய்விட்டேன்–உலரவே இல்லை; ரவிக்கை வெறும் ஈரம். வெயிலில் போட்டிருக்கிறேன். நெற்றிக்கு வைத்துக் கொண்டிருக்கிறேனா, பார்!'

பாலு பார்த்துக் கொண்டு தான் இருந்தான்.

'குங்குமம் இருக்கிறது!'

'இப்பொழுது என்னைப் பார்த்தால் எப்படி இருக்கிறது?' என்று கமலம் சிரித்துக் கொண்டே கேட்டாள்.

'மோகினி போல இருக்கிறது!'

'என்ன, மோகினிபோலா!'

இருவருக்கும் மேலே வார்த்தையே ஓடவில்லை.

அப்பொழுது பாலு திடீரென்று கமலத்தின் முகத்தில் எதைக் கண்டானோ, ஒரு தாவாகத் தாவி ரேழிக்குப் போய் விட்டான்.

'பாலு!' என்று கமலம் கூப்பிட்டாள்.

'நான் போகிறேன், அம்மாமி!' என்ற பதில் அவள் காதில் விழுந்தது.

## 3

'என்னடி கமலம், சாப்பாடாச்சா? உங்களகத்துக்காரர் ஊரில் இல்லையா? அதான் சாவகாசமாக ஊஞ்சலாடுகிறாய்! உனக்கென்னம்மா' என்று சொல்லிக் கொண்டு எதிர்வீட்டு சீதா வெற்றிலை வாயுடன் ஊஞ்சலில் வந்து உட்கார்ந்தாள்.

'வா, சீதா!' என்று கமலத்தின் வாய் சொல்லிற்று. கைகள் தலை மயிரை முடிந்தன; முந்தானையை இழுத்துக் கட்டின.

'இதென்ன புஸ்தகம்?' என்று சீதா ஊஞ்சலில் கிடந்ததை எடுத்துப் பார்த்தாள்.

பாலு எடுத்துக் கொண்டு போகாமல் போட்டுவிட்டுப் போய்விட்ட புத்தகத்தைப் பார்த்ததும் சற்று திடக்கிட்டு கமலம், 'அதா, பங்கிம் சந்திரரின் மாதங்கனி–நாவல்!'என்றாள்.

'இங்கேன் கிடக்கிறது? படித்துக் கொண்டு இருந்தாயா?'

'இல்லை...அதா...பாலு... எடுத்து வைத்தான்.'

'இப்பொழுதுதான் போகிறான், பார்த்தேன். மறந்து போய் விட்டானா? நீ கூடப் பார்க்க வில்லையா?'

'என்னவோ பேசிக் கொண்டிருந்தான்; நானும் கவனிக்கவில்லை.'

'ஆமாம், அவன் முன்னால் இப்படியா உட்கார்ந்திருந்தாய் கமலம்?'

'என்னடி இப்படிப் பேசுகிறாய் சீதா... பாலு யார்?'

'அது சரிதானடி கமலம். சாண் பிள்ளையானாலும் ஆண்பிள்ளை இல்லையோ?'

'அந்தக் கபடமெல்லாம் எனக்குத் தெரியாதம்மா!'

'தெரியாவிட்டால் உலகம் சும்மா இருக்குமோ? நான் ஆனதால் சரியாகப் போச்சு... சேச்சி வந்திருந்தால் இப்போது?'

'வந்திருந்தால் என்ன என்கிறாய்?'

'வந்திருந்தால் என்னவா? உடனே முடிச்சுப் போட்டு விட மாட்டாளோ? கோபித்துக் கொள்ளாதே, கமலம்! நல்லதைத்தான் சொன்னேன்.'

'அவன்–பாலு–என் முகத்தைக் கண்ணெடுத்துப் பார்த்துக்கூடப் பேசுவதில்லை... அவ்வளவு சாது அவன்?'

'கமலம், நாம் இரண்டு பேரும் குட்டிகளாய் இருந்தது முதல் கூடி விளையாடி இருக்கிறோம், அசட்டுப் பிசட்டு என்று பேசிக்கூட இருக் கிறோம். ஆகையால், நான் உன்னிடம் சொல்லலாம். பெண் பிள்ளை களுக்குள் சொல்லிக் கொள்வதில் என்ன?'

'பாலு கெட்ட எண்ணத்துடன் இங்கே வருகிறான் என்கிறாயா, சீதா!'

'இல்லையடி! அவன் இங்கே வந்து உன்னுடன் பேசிப் பழகுவது உனக்குப் பிடித்திருக்கிறது. ஆகையால் அவனிடம் நீ கொஞ்சம் தாராள மாகக்கூட பழகுகிறாய். அதனால் அவன் எண்ணம் கெட்டாலும் கெடும், வயதாயிற்றல்லவா?'

'அவன்மேல் எனக்கு....?'

'அவசரப்படாதே. உனக்கு என்றால், உனக்கு என்று மட்டும் நினைக் காதே! உன்னைப்போல இருக்கிற எல்லோருக்கும் இந்தமாதிரி அழகான பையன் ஒருவன் வந்து சுற்றிக்கொண்டு திரிந்தால், ஏதோவொரு சந்தோஷம் இருக்கத்தான் செய்யும். எனக்கும் அந்தமாதிரி ஒரு சமயம் இருந்தது. தெரியுமா?'

'அதெப்பொழுது?'

'மூன்றாம் வருஷம் எங்கள் வீட்டில் ஒரு சப்ரிஜிஸ்ட்ரார் இருந்தா ரல்லவா? அவர் பிள்ளை....'

'ஆமாம் லீவுக்கு வந்திருந்தான்!'

'அவன் என்னுடன் பேசுவதில்லை, அவ்வளவுதான். ஆனால், பார்க்கிறபோதெல்லாம் அவனுக்கு ஏதோ சந்தோஷம். எனக்கும் அவன் முன்னால் நடமாடுவது ஒரு இன்பமாகத் தானடி இருந்தது. ஒருநாள் வீட்டில் ஒருவரும் இல்லை. புருஷர்கள் ஆபீஸுக்குப் போய் விட்டார்கள்; மற்றும் பெரியவர்கள் ஸ்வாமி தீர்த்தம் கொடுக்கிறது என்று ஸ்நானம் செய்யப் போய்விட்டார்கள். அந்தப் பையன் மாடியில் படித்துக் கொண்டிருந்தான். நான் வாசற்கதவைத் தாளிட்டுக் கொண்டு கிணற்றடியில் குளிக்கப்போனேன். அவன் இருக்கிறதே எனக்குத் தெரியாது. தனியாக இருக்கிறோம் என்று சாவகாசமாக சோப்புத் தேய்த்துக் கொண்டிருந்தேன். என்ன ஆச்சு தெரியுமோ? அவன் திடீ ரென்று கிணற்றடிக்கு வந்து விட்டான்! என் மானமே போய்விட்டது. அவனும் திண்டாடிப் போய் விட்டான், பாவம்! ஒரு வினாடி அவனால் அசைய முடிய வில்லை. நானும் அப்படியே நின்று போனேனடி!'

'அவன் வேண்டுமென்றுதான் வந்தானோ, என்னவோ?'

'இல்லவே இல்லை. நான் அங்கே இருப்பது அவனுக்கு தெரிந் திருக்கவே முடியாது. நானும், அவன் வீட்டிலேயே இல்லை என்றுதான் நினைத்திருந்தேன். ஆனால்...?'

'ஆனால் என்ன?'

'ஆனால் அவன் பார்வை அந்த வினாடி என்மேல்தான் நின்றது. என்

தேகம் பூராவும் ஒருவிதமான புல்லரிப்பு. மறுவினாடி அவன் போய் விட்டான். எனக்கும் வெட்கம் வந்தது. இதற்கு என்ன சொல்லுகிறாய்?'

'அப்புறம்?'

'அவ்வளவுதான். அவன் ஊருக்குப் போகிறவரையில் நான் அவன் கண்ணிலேயே படவில்லை. அவனும், வீட்டில் ஏதோ காரணம் சொல்லி விட்டு, உடனே புறப்பட்டு விட்டான்.'

இப்பொழுது நான் சொல்லட்டுமா சீதா?'

சீதா கிட்ட நெருங்கி கமலத்தின் தோளில் கை போட்டுக் கொண்டாள்.

'இன்று என்னமோ, ஒரு பைத்தியம். அவன் வந்ததும், போய்க் குளித்துவிட்டு இந்தமாதிரி வந்து அவன் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டேன்.'

'அவன் என்ன பாடுபட்டிருப்பான் தெரியுமா?'

'வேண்டுமென்றே நான் அவனை என் முகத்தைப் பார்க்கச் சொன்னேன்!'

'குங்குமம் இருக்கிறதா பார் என்றாயாக்கும்–ஒன்றும் புதிதல்ல!'

'பார்த்தான். 'மோகினிபோல் இருக்கிறேன்' என்றானடி!'

'அவனாகவா?'

'இல்லை, நான் கேட்டேன்!'

'அவன் முகத்தில் அப்பொழுது...'

'சாதுப்பிள்ளையாச்சே!' என்று சீதா சிரித்துக் கொண்டே கமலத்தை அணைத்துக் கொண்டாள்.

'அவன் தைரியம் என்னைத் தூக்கி வாரிப்போட்டு விட்டது என்றாலும், அவன் அந்தமாதிரி ஏதாவது சொல்ல வேண்டுமென்றுதான் கேட்டேன்!'

'அவனும் திகிலடைந்து போயிருப்பான்!'

'ஒரு நிமிஷம்...'

'ஒன்றுமே ஓடாது!'

'மறு நிமிஷம் அவன் போய்விட்டான்!'

'புத்தகத்தையும் போட்டுவிட்டு!'

'நான் செய்ததையும் சொல்லிவிடுகிறேன், சீதா... இனிமேல் என்ன... 'பாலு!' என்று கூப்பிட்டேன்!'

'நானாயிருந்தாலும் அப்படித்தான் செய்திருப்பேன்!'

'ஐயோ, அவன் வந்திருந்தால்....?'

'இனிமேலுமா....?'

'வரவேமாட்டான்!'

'நான்....'

'நீயும் இனிமேல் அவன் கண்ணில் படமாட்டாய்!'

'ஆமாம், அவன் முகத்தில் இனி எப்படி விழிப்பதடி?'

'அவனும் அப்படித்தான் யோசிப்பான். இத்துடன் சரி – இந்த

விசித்திரம்.'

'ஆனால், எவ்வளவு இன்பமாக இருந்தது!'

'இப்படி முடிவடையத்தான்!'

'எனக்கு புத்தி இப்படிப் போகக்கூடாது....'

'உன்மேல் தப்பில்லை, கமலம். அது ஒரு சமயம், அவ்வளவுதான்; இனிமேல் நேராது.'

'அவன் என்ன நினைத்துக் கொள்வான்?'

'நீ என்ன நினைப்பாய் என்று அவனும் தவித்துக் கொண்டிருப்பான்.'

'இந்தத் தவிப்பும்கூட ஒருவிதத்தில் சந்தோஷமாக இருக்குதடி, சீதா!'

'இந்த உப்புச் சப்பற்ற வாழ்க்கையில் வேறென்னதான் இருக்கிறது என்கிறாய்?'

'அம்மா, நீ வந்தாயே சமயத்துக்கு!'

## 4

'உங்கள் ஆராய்ச்சி என்ன ஆயிற்றோ?' என்று ரதி கும்மாளத்துடன் கேட்டாள்.

'அந்தப் பயல்-பாலு-சுத்த திராபைப் பயல்-பயங்கொள்ளி!'

'ஏன், என்ன ஆச்சு?'

'இன்னும் சிறிது நேரம், அவன் அங்கே அந்த ஊஞ்சலில் உட்கார்ந் திருந்தானானால், நான் ஒருகை பார்த்திருப்பேன்!'

'என் உதவி இல்லாமலா? நான்தான் விலகி நின்று விட்டேனே!' நான் இல்லாமல் உங்கள் காரியம் பலிக்குமா?'

'ஏன் விலகி நின்றாய்?' என்று மன்மதன் கோபத்துடன் கேட்டான்.

'இந்தக் காதலுக்கு இவ்வளவுதான் வளரும் இடம். இதற்குமேல் இது போகாது. போனால் ராஸாபாஸம்தான்-துக்கம்தான். வீழ்ச்சியின் இன்பம் இதில் கிடைக்காது.'

'பயலை அவ்வளவு தூண்டினேன்!'

'அவளும் ஒரு படி தாண்டியே, 'பாலு!' என்றுகூடக் கூப்பிட்டு விட்டாளே!'

'நிமிஷ நேரத்தில் காரியத்தைக் கெடுத்துவிட்டான்.'

'இல்லை, அவள் கூப்பிட்டது காதில் பட்டிருந்தாலும்-பட்டிருக்கும்- அவன் வந்திருந்தாலும் அவள் எழுந்து உள்ளே ஓடிப்போயிருப்பாள்!'

'உனக்கு எப்படித் தெரியும்?'

'அதற்குமேல், அந்த அனுபவத்திற்குமுன் நின்று, அதைத் தாங்க அவர்களால் முடியாது!'

'ஏன்?'

'எந்தத் துணிகரமான செயலுக்கும் ஒரு எல்லை இருக்கிறது. அதைத் தாண்ட யாராலும், எந்தத் தூண்டுதல் இருந்தாலும் முடியாது.'

'காதலுக்குத்தான் கண் இல்லையே!'

'காதலை அறியாதவர்கள் அப்படிச் சொல்லுவார்கள். காதல் என்ற நெருக்கடியில்தான் கண் கூர்மையாகிறது. அதனால்தான் பாலு எழுந்து ஓடினான். அவன் ஓடியிருக்காவிட்டால் கமலம் ஓடியிருப்பாள். அது சிருஷ்டியின் விதி. அதைத் தடுக்க நம்மால் கூட முடியாது.'

'இருந்தாலும், இந்த மாதிரி நிலைகளை உண்டாக்கிக் கொண்டே இருக்கிறேன், பார்ப்போம்!'

'பார்ப்பதென்ன? மோகினி நிலையின் மாயை நீடிக்காது; வான வில்லின் கவர்ச்சியுடன் அது ஒரு கணம்தான் நிற்கும்!'

'அந்தக் கணநேரத்தில் வாலிபனை அடித்துவிடும்!'

'திடமுள்ளவன் தப்பித்துக் கொள்ளுவான்!'

●